# பாடு பாப்பா

**NURSERY RHYMES**
**For Children 4-7 Years**

நாரா நாச்சியப்பன்



தமிழாலயம்

137, ஜானி ஜான்கான் தெரு
சென்னை—600 014.

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | — | Paadu Paappa (Sing Baby) |
| Author | — | Nara Nchiappan |
| Language | — | Tamil |
| Date of Publication | — | September, 1985 |
| Copy right holder | — | Author |
| Paper used | — | 11.6 kg white printing paper |
| Size of the book | — | 12.5 x 18 cm |
| Number of pages | — | 36 |
| Price | — | Rs. 4/-(Rupees four) |
| Cover Drawing | — | Mani |
| Printers | — | Novel Art Printers<br>Madras-600 014<br>Phone : 82731 |
| Publishers | — | Thamizhalayam<br>— 137, Jani Jankan Road<br>— Madras- 600 014 |
| Subject | — | Nursery Rhymes |

# பதிப்புரை

நம் அருமைச் செல்லப் பிள்ளையைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்புகிறோம். பள்ளிக்குச் சென்ற மறுநாளே தனியாக இருக்கும்போது அந்தப் பிள்ளை வாய்க்குள் சில பாடல்களை இசையோடு பாடுவதைக் காண்கிறோம். "எங்கே, பாடு!" என்று நாம் ஊக்கப்படுத்தினால், அது நடிப்போடு ஆசிரியை சொல்லிக் கொடுத்தபடி மழலை மொழியில் பாடிக்காட்டும்போது பெற்றவர் உள்ளமெல்லாம் களி கொள்ளுகின்றது; துள்ளி மகிழ்கின்றது.



"இரண்டே நாளில் என் கண்மணி எவ்வளவு கற்றுக் கொண்டு விட்டது" என்று பெருமைப்படுகின்றோம்.

தற்போது பள்ளிக்கூடங்களில் ஆங்கில மழலைப் பாடல்களையே சொல்லிக் கொடுக்கிறார்கள். விடுதலை பெற்ற நமது நாட்டில் இன்னும் ஆங்கில மொழி மோகமும் ஆதிக்கமும் இருப்பது நாட்டுப் பற்றாளர்களுக்கு வேதனை தருவதாகும். இந்நிலை மாற வேண்டும்.

நமது தமிழ்க் கண்மணிகள் தமிழில் மழலைப் பாடல்கள் பாடுவதே—தமிழ்ப் பெற்றோருக்குத் தலையாய இன்பத்தைத் தர வல்லதாகும்.

நிலா நிலா ஓடிவா
நில்லாமல் ஓடிவா
மலைமேலே ஏறிவா
மல்லிகைப் பூக்கொண்டுவா!

காக்காய் காக்காய்
கண்ணுக்கு மை கொண்டுவா
கோழி கோழி
கொண்டைக்குப் பூக் கொண்டுவா!

என்றெல்லாம் மழலைப் பாடல்கள் தமிழ் மொழியில் நிறைய இருக்கின்றன. கவிமணி தேசிக விநாயகமும், பாவேந்தர் பாரதிதாசனும், குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவும், கவிஞர் நாக முத்தையாவும் இன்னும் பலரும் மழலைத் தமிழ் இலக்கியத்தைப் பெரிதும் வளப்படுத்தியிருக்கிறார்கள்.

தமிழில் மழலைப் பாடல்கள் மிகுதியாக வேண்டும் என்ற கருத்தில் கவிஞர் நாரா நாச்சியப்பன் அவர்கள் படைத்துக் கொடுத்த அமுதப் பாட்டுகளின் இனிய தொகுப்பே இது.

இதனைக் குழந்தைகள் விரும்பும் வண்ணம் வண்ணப் படங்களோடு வெளியிட முன் வந்துள்ளோம். பெற்றோர் தம் அருமைக் குழந்தைகளுக்கு இந்நூலை வாங்கிக் கொடுத்து படிக்கச் செய்து பயன்பெற — இன்பம் பெற வேண்டுகின்றோம்.

—தமிழாலயத்தார்



விளக்கு நல்ல விளக்கு
வெளிச்சம் தரும் விளக்கு
வீட்டை அழ காக்கும்
வெண்கலப் பொன் விளக்கு!

இருட்டு கின்ற நேரம்
எழுந்து விளக் கேற்றிக்
குருட்டுத் தனம் போகக்
குந்திப் பாடம் படிப்போம்!

விளக்கு நல்ல விளக்கு
வெளிச்சம் தரும் விளக்கு





அப்பா அம்மா வணக்கம்
அண்ணா அண்ணி வணக்கம்
அன்புத் தாத்தா பாட்டி
அனைவ ருக்கும் வணக்கம்

அறிவு தரும் எங்கள்
ஆசிரி யர்க்கும் வணக்கம்
அன்பு கொண்டு வாழ்த்தும்
அருளோர்க் கெல்லாம் வணக்கம்

வணக்கம் வணக்கம் அன்பு
வளர்ப்போர்க் கெல்லாம் வணக்கம்



வள்ளுவர் செய்த திருக்குறளைப்
படித்தோர் அறிஞர் ஆவாரே!
அள்ளி யள்ளி யுண்டிடவே
அறிவுப் படையல் படைத்தாரே!

திருக்குறள் கற்றால் நெஞ்சத்தில்
தெளிவு பிறக்கும்! வாழ்க்கையிலே
இருக்கிற இன்பம் அத்தனையும்
எளிதில் கிடைக்கும் ஆமாமாம்!

வள்ளுவர் செய்த திருக்குறளை
வாங்கிப் படிப்போம் வாவாவா!



அன்பு காட்டு தாயிடம்
அழகு பெருகும் உன்னிடம்
அன்பு காட்டு தந்தைக்கே
அறிவு பெருகும் உன்னிடம்

அன்பு காட்டு பகையிடம்
அமைதி நிலைக்கும் உன்னிடம்
அன்பு காட்டு உயிர்க்கெலாம்
அவனி போற்றும் உன்னையே!

புத்தர் சொன்ன பொன்மொழி
போற்றி அன்பு காட்டுவோம்!



அன்புவழி காட்ட வந்த
காந்தித் தாத்தா—நம்
அடிமைத் தனம் போக்கவந்த
காந்தித் தாத்தா!

புன்சிரிப்பால் உலகை வென்ற
காந்தித் தாத்தா—மெய்
போற்றி வெற்றி கண்டநல்ல
காந்தித் தாத்தா!

காந்தித் தாத்தா காந்தித் தாத்தா
கருணை யுள்ள காந்தித் தாத்தா!



பாரதியார் இவர் பாரதியார்—தமிழ்ப்
பாட்டுப் பாடிடும் பாரதியார்
வீரராம் இவர் பாரதியார்—நாட்டு
விடுதலைக் கவி பாரதியார்!

இந்திய நாட்டு விடுதலைக்கே—இவர்
எழுதிய பாட்டுகள் ஆயிரமே
முந்திய மூடப் பழக்கங்களை—முட்டி
மோதி யொழித்தவர் பாரதியார்

பாரதியார் இவர் பாரதியார்—வீரப்
பாட்டுப் பாடிடும் பாரதியார்



அண்ணா அண்ணா அண்ணா
அறிஞர்க் கறிஞர் அண்ணா
அண்ணாந் திருந்து பார்க்க
அழகாய்ப் பேசும் அண்ணா

அறிவு வழியைக் காட்டி—நம்
அன்பைப் பெற்ற அண்ணா
வறுமை தொலைய நாட்டில்—உயர்
வளத்தைச் சேர்த்த அண்ணா

அண்ணா அண்ணா அண்ணா
அறிவின் உருவம் அண்ணா!



சோலையிலே உதிர்ந்த மலர்
கோலம் போடுது
தோகை மயில் இறகுகளில்
கோலம் போடுது

கோல நிலா மரநிழலில்
கோலம் போடுது
கொண்டையிலே மல்லிகைப் பூ
கோலம் போடுது

வாசலிலே அம்மா கை
போட்ட கோலமே
பார்க்கப் பார்க்க அழகுதரும்
வண்ணக் கோலமே!



அழகிய பூவே அழகிய பூவே
அமுதம் தருவாயே
பழகிய வண்டு பறந்து வந்தது
பார்த்து மகிழ்வாயே!

தேனை எங்கே ஒளித்து வைத்தாய்
தெரிய வில்லையே.
வானில் பறந்து வந்த வண்டு
கண்டு கொண்டதே!

அழகிய பூவே அழகிய பூவே
மலர்ந்து சிரிப்பாயே



தங்கக்குலை தொங்குதுபார்
மாமரத்திலே!
தகதகத்து மின்னுதுபார்
மாமரத்திலே!

கல்லெடுத்தே எறியலாமா
மாம்பழத்திலே?
கள்ளத்தனம் கூடாதுபார்
நமது நாட்டிலே!

கடைக்குவரும் வாங்கித் தின்போம்
வேண்டு மட்டுமே
கற்கண்டாய் இனிக்கும் அந்த
மாம்பழங்களே!



பூத்தது பூத்தது தாமரையே
புன்னகை பூத்தது தாமரையே
செங்கதிர் மன்னனைக் கண்டவுடன்
சிரித்தது பூத்தது தாமரையே!

பனியை விரட்டிய பகலவனைப்
பார்த்துச் சிரித்தது தாமரையே
இனிமை பரப்பிய கதிரொளியை
ஏற்றுச் சிரித்தது தாமரையே!

வையம் முழுவதும் வரவேற்று
வாழ்த்துச் செய்தியைத் தெரிவிக்க
மெய்யாய் இதழ்கள் அத்தனையும்
விரித்தது சிரித்தது தாமரையே!



கடலின் அலைகள் கரையை மோதித்
திரும்பிச் சென்றன
குடுகு டென்று நண்டுப் பிள்ளைகள்
ஓடி வந்தன!

எத்தனை வேகம்! எத்தனை வேகம்!
என்னைப் பார்த்ததும்
அத்தனை நண்டும் ஓடி ஒளிந்தன
பொந்து மணலிலே!

ஓடி ஒளியும் வீரர்களே
திரும்பி வாருங்கள்
ஒன்றும் தொல்லை இல்லை என்னால்
ஓடி வாருங்கள்!



வெள்ளைக் காரன் கப்பலோடு
போட்டி போடவே
வீரர் வ. உ. சிதம்பரனார்
விட்ட கப்பலே!

உரிமைக் கப்பல்! அருமைக் கப்பல்
கடலின் நீரிலே
பெருமை யோடு சென்ற கப்பல்!
வெற்றிக் கப்பலே!

உரிமை காத்த வ. உ. சி. யை
வாழ்த்திப் பாடுவோம்!
அருமை யான தாயகத்தைக்
காத்து வாழுவோம்!



கண்ணே கண்ணுறங்கு—கட்டிக்
கரும்பே கண்ணுறங்கு!
மண்ணைப் பொன்னாக்க—வந்த
மணியே கண்ணுறங்கு!

அன்பில் பிறந்துவந்த—இன்
அமுதே கண்ணுறங்கு!
என்னைப் பெற்றெடுத்த—என்
தாயே கண்ணுறங்கு

பொன்னே கண்ணுறங்கு—புதுப்
பூவே கண்ணுறங்கு!
மின்னல் ஒளிக் கீற்றே—சுவைத்
தேனே கண்ணுறங்கு!



கண்ணா கண்ணா நடைபழகு
கண்ணின் மணியே நடைபழகு
இடக்கால் வலக்கால் சீராக
எடுத்து வைத்து நடைபழகு!

நல்ல நினைப்பே கொண்டிடுவாய்
நல்ல பேச்சே பேசிடுவாய்
நல்ல செயலே செய்திடுவாய்
நல்ல வழியே நடந்திடுவாய்!

உண்மை ஒன்றைப் பிடித்துக் கொள்
ஒவ்வோர் அடியாய் முன்னேறு
கண்ணா கண்ணா நடைபழகு
கண்ணின் மணியே நடைபழகு!



கை வளையல் கை வளையல்
　　கண்ணாடி வளையலாம்!
கல கலக்கும் கிலு கிலுக்கும்
　　கண்ணாடி வளையலாம்!

சின்னப் பெண்கள் சிரிப்பது போல்
　　ஒலியெழுப்பும் வளையலாம்!
சிவப்பு பச்சை ஊதாவென்று
　　சிலுசிலுக்கும் வளையலாம்!

வளையல் காரர் வந்து விட்டார்
　　ஓடியோடி வாருங்கள்
வளையல் வாங்கிப் போட்டுக் கையை
　　நீட்டிநீட்டிப் பாருங்கள்!



மதி அமைச்சரே மதி அமைச்சரே
மாதம் மும்மழை பொழிந்ததா?
விதி முறைப்படி அந்தண ரெல்லாம்
வேதம் ஓதுகின் றாரா?

மதி அமைச்சரே மதி அமைச்சரே
மடையில் மீன்கள் துள்ளுதா?
புதிய பயிர்கள் செழித்து வளர்ந்து
பொருள் விலைகள் குறைந்ததா?

மதி அமைச்சரே மதி அமைச்சரே
மக்கள் கல்வி வளர்ந்ததா?
மடமை தொலையக் கடமை யாற்றி
உடைமை கொண்டு மகிழ்ந்ததா?



குடி யிருக்கக் கோயில்!
　　கொரித்துத் தின்னப் பழங்கள்!
கொஞ்சிக் கொஞ்சி மகிழக்
　　குட்டி போடும் வௌவால்!

பறக்கத் தெரிந்த போதும்
　　பறவை யல்ல வௌவால்!
இறக்கை போலத் தோலை
　　விரித்துப் பறக்கும் வௌவால்!

இருட்டு மண்ட பங்கள்
　　இறைவன் ஆலயங்கள்
குருட்டு வௌவால் தொங்கிக்
　　கொண்டிருக்கும் இடங்கள்!



காட்டுப் புலி காட்டுப் புலி
வேட்டை யாடுது
கலை மானும் குழி முயலும்
கலங்கி யோடுது!

காட்டுப் புலி காட்டுப் புலி
பாய்ந்து போகுது
கள்ள மில்லா உயிர்க ளெல்லாம்
சாய்ந்து மாயுது!

ஒன்றைக் கொன்றே ஒன்று தின்ன
உலகைப் படைத்தவன்
என்றும் நன்றாய் இருக்க மாட்டான்
எண்ணம் துடிக்குதே!



மேடை மீதில் ஏறித்
தாளத் தோடே ஆடி
பாடல் கருத்தை நெஞ்சில்
பதிய வைப்போம் வாடி!

ஆட ஆட இன்பம்
ஆட வாடி தங்கம்!

காலில் சலங்கை குலுங்க
கையை நீட்டி வளைத்து
மேலும் மேலும் குதித்து
மின்னல் போல நடித்தே

ஆட ஆட இன்பம்
ஆட வாடி தங்கம்!



புளிய மரத்தில் புளியிருக்கும்
முனியிருக்காது!
புதுக் குளத்தில் நீரிருக்கும்
பேயிருக்காது!

வானத்தில் விண் மீனிருக்கும்
தேனிருக்காது!
தாய் மனத்தில் அன்பிருக்கும்
துன்பிருக்காது!

அடுத்தடுத்து முயற்சி செய்தால்
வெற்றியுண்டாகும்!
அவர் வாழ்வில் சுவையிருக்கும்
பயமிருக்காது!



பள்ளி செல்லும் பாப்பா
பாடம் நன்றாய்ப் படிப்பாள்
வெள்ளை யாடை யுடுப்பாள்
விரைந்து நேராய் நடப்பாள்!

நல்ல நல்ல வழக்கம்
நாளுங் கற்று வருவாள்
மெல்ல மெல்லப் பெரிய
மேதை யாகி விடுவாள்!

கற்ற பெண்கள் நாட்டின்
கண்கள் என்று சொல்வார்
சுற்றம் போலே மக்கள்
சூழ்ந்து போற்றி நிற்பார்!



ஓடும் ஓடும் ஓடை
ஒவ்வோர் நொடியும் ஓடும்
பாடும் பாடும் இசையே
பகலும் இரவும் பாடும்!

பயிருக் குணவாம் நீரைப்
பாய்ச்சிக் கொண்டே ஓடும்
உயிர்கள் வாழ்க என்றே
உரத்த குரலில் பாடும்!

தங்கக் கதிரின் ஒளியில்
தகதகக்கும் ஓடை
எங்கும் பசுமை தவழ
எழில் பெருக்கும் ஓடை!



கல்லைப் படைத்தார் கடவுள்—அந்தக்
கடவுள் சிலையைப் படைத்தான் சிற்பி

கல்லைப் படைத்தார் கடவுள்—அந்தக்
கடவுள் கோயில் படைத்தான் சிற்பி

கல்லைப் படைத்தார் கடவுள்—அதில்
கலையும் அழகும் படைத்தான் சிற்பி

கல்லைப் படைத்தார் கடவுள்—அந்தக்
கல்லில் கும்பம் படைத்தான் சிற்பி

கல்லைப் படைத்தார் கடவுள்—அந்தக்
கல்லுக்குப் பெருமை சேர்த்தான் சிற்பி!



விந்தையிலும் விந்தை!
உலகிற்பெரும் விந்தை!
சிந்தை யள்ளும் வண்ணம்
செய்து வைத்த விந்தை!

பார்க்கப் பாரக்க வியப்பு!
பளிங்குக் கல்லின் பதிப்பு
கற்ப னையின் ஆற்றல்
கவிதை யான தோற்றம்!

மும்தாஜ் என்னும் அரசி
மூடி விட்டாள் கண்ணை!
தாஜ் மகாலாய் இன்றும்
நிலைத்து வாழு கின்றாள்!



பாம்பே பாம்பே நல்ல பாம்பே!
　　படமெடுத் தாடும் நாகப் பாம்பே
இத்தனை யழகாய் இருக்கும் நீதான்
　　ஏனோ நஞ்சை வைத்திருக்
　　　　　　　　　　கின்றாய்?

மகுடி யிசையைக் கேட்டுக் கேட்டு
　　மகிழ்ந்து கூத் தாடு கின்றாய்
வெகுளி கொண்டாய் நச்சுப் பல்லால்
　　வேதனை சேரக் கொட்டுகின்றாய்!

அற்ப சினத்திற் குயிரைக் குடிக்கும்
　　ஆகாச்செயலைச்செய்யும்உனக்கே
ஆட்டம் எதற்குத் தடியை எடுத்தோம்
　　ஓட்டம் எடுப்பாய்! ஓஓ போவாய்!



உற்று உற்றுப் பார்க்கிறார்
உறுமி உறுமிப் போகிறார்
குற்றஞ் செய்யும் நோக்குடன்
குதிக்கி றாரே பூனையார்!

சந்து பொந்துப் பக்கத்தில்
சாயுங் கால நேரத்தில்
பந்தம் போன்ற கண்ணுடன்
பாய்கி றாரே பூனையார்!

இடுங்கி யுள்ள கண்களும்
எடுப்பா யுள்ள மீசையும்
நடுங்கச் செய்யும் முகத்துடன்
நடக்கி றாரே பூனையார்!



நாளிதழ் வாங்கிப் படியுங்கள்
நாட்டு நடப்பை அறியுங்கள்
காலம் சுழலும் மாற்றத்தைக்
கணக்காய் அறிந்து வாழுங்கள்!

அரசியலுண்டு; விலை மாற்றம்
அறிய லாகும்; விளையாட்டும்
திருவிழாவும் ஆயிரமாம்
செய்திகள் அறிந்து மகிழ்ந்திடலாம்!

உலகம் காணும் முன்னேற்றம்
ஒவ்வோர் நொடியும் அறிந்திடவே
நாளிதழ் வாங்கிப் படியுங்கள்
நாட்டு நடப்பை அறியுங்கள்!



கோயிலுக்குப் போவோம்
குறைக ளின்றி வாழத்
தூய நெஞ்சத் தோடு
தொழுது வணங்கி நிற்போம்!

ஏழை மக்கள் வாழ
இறைவா அருளைப் புரிவாய்!
கோழை மக்கள் நிமிரக்
கொடுப்பாய் அன்பு வரங்கள்!

நேர்மை யுள்ள மனத்தில்
நிற்பான் என்றும் ஈசன்
வேர்வை சிந்து வோரை
விரும்பிக் காப்பான் ஈசன்



யானையிது யானை சிவன் கோவில் யானை
அழகுமிக்க தேவன் ஏறிவரும் யானை!
கழுத்துமணி யசைய நடந்துவரும் யானை
கைதூக்கி வணக்கம் காட்டிவரும் யானை
தேங்காய்பழம் கொடுத்தால் திருத் துதிக்கை நீட்டி
வாங்கியுண்டு நன்றி வணக்கமிடும் யானை
குழந்தைகளை முதுகில் கொண்டு செல்லும் யானை
கொண்டாட்டம் போட்டுக் கொண்டுவரும் யானை
குளத்துக்குள்ளே இறங்கிக் குழாய்நீரில் குளிக்கும்
மகத்துவம் சேர் யானை மதிப்புமிக்க யானை!



வெட்டிப் போட்டு மண்ணை
விதை விதைக்க வேண்டும்
எட்டு நாளில் முளையே
எட்டிப் பார்க்கும் வெளியே!

எருவும் நீரும் இட்டுப்
பிள்ளை போலக் காத்தால்
பெரிய செடி யாகும்
பின்பு பூத்துக் குலுங்கும்!

ஈயும் வண்டும் சேரப்
பூவும் பிஞ்சாய் மாறும்
காயும் பழமும் தின்று
நோயில் லாமல் வாழ்வோம்!



அக்கரைக்குச் செல்லு திந்த
அன்னப் படகு
ஆற்றுவெள்ளம் தாண்டுதிந்த
அன்னப் படகு!

அக்கரைக்கும் இக்கரைக்கும்
வணிகம் வளர
ஆக்கப்பணி செய்யுதிந்த
அன்னப் படகு!

அறியாமை போக்க வந்த
அன்னப் படகு!
அயலும் உறவும் கூடச்செய்த
அன்னப் படகு!



# தமிழாலயம் வெளியீடுகள்

## நாரா நாச்சியப்பன் எழுதியவை

| | | |
|---|---|---|
| 1. | நாச்சியப்பன் பாடல்கள் I | ரூ. 15 |
| 2. | நாச்சியப்பன் பாடல்கள் II | 15 |
| 3. | புதுமுறை பஞ்ச தந்திரக் கதைகள் | 15 |
| 4. | மூன்று திங்களில் அச்சுத்தொழில் | 10 |
| 5. | ஏழாவது வாசல் | 5 |
| 6. | மாயத்தை வென்ற மாணவன் | 5 |
| 7. | அப்பந்தின்ற முயல் | 5 |
| 8. | குயில் ஒரு குற்றவாளி | 5 |
| 9. | பள்ளிக்குச் சென்ற சிட்டுக் குருவிகள் | 5 |
| 10. | தாவிப்பாயும் தங்கக்குதிரை | 4 |
| 11. | பாடு பாப்பா | 4 |
| 12. | பறவை தந்த பரிசு | 4 |
| 13. | நாயகப் பெருமான் | 4 |
| 14. | அசோகர் கதைகள் | 2 |

**தமிழாலயம்** 137, ஜானி ஜான்கான் தெரு
சென்னை-600 014.